# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஹேவிளம்பி – ஆவணி – 2017 – ஆகஸ்ட்

29



நாச்சியப்ப சுவாமிகளின் ஆறாவது குருபூஜையை முன்னிட்டு, பள்ளி (மாற்றுத்திறனாளி) மாணவர்களுக்கு நடைபெற்ற பல்வேறு போட்டிகளில் கலந்து கொண்ட பிள்ளைகள்

உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஹேவிளம்பி - ஆவணி - 2017 - ஆகஸ்ட்   இதழ் - 62

சிறப்பாசிரியர் :
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்).
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய செளந்தர்".
7G. ஜவஹர் தெரு. நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

## பொருளடக்கம்



தனி இதழ் ரூ 10.00
ஆண்டுச் சந்தா ரூ 100.00

உ
சிவமயம்




# இறை வணக்கம்

மன்னவனாம் பாண்டியனின் திருமகளாய் அவதரித்த

மீனாட்சி திருநாமம் பலவா யாகும்

மேலனைக்கும் மகளாகி விளங்கும் கன்னி

நன்னலங்கள் தரும்வைகை நாடாண்ட பெண்ணரசி

நமக்கென்று காசியிலே வீற்றி ருப்பாள்

நற்பதியாம் காஞ்சியிலே பட்டு டுத்தி

என்னாளும் அருள்கின்றாள் எழில்திகழும் சமிவனத்தில்

இனியமதி வதனமுடன் இருந்து நம்மை

என்றென்றும் காக்கின்றாள் புவன நாதன்

தன்னருகில் இடங்கொண்டாள் அவளின் பாதம்

தலைவைத்தால் அவர்கட்கு நன்மை கிட்டும்

தமிழ்முறையில் உருவானாள் உண்மை தானே!

காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

**சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

இலக்கியத்தில் அகம், புறம் என்று பிரிக்கப்படுவதுபோல உயிர் இனங்களிலும், குறிப்பாக மனிதகுலத்தில் அகம், புறம் என்று இரு வகையாக அறியப்படுகிறது. உள்ளும் புறமும் தூய்மையாக இருக்க வேண்டுமென்று சொல்வார்கள்.

இந்த உள் என்பது 'அக நான்', புறம் என்பது புறநான். மனிதன் குழந்தையாகப் பிறந்து மாணவன், இளைஞன், சம்சாரி, வயோதிகன் எனக்கால மாற்றத்தால்வளர்வதும் இறப்பதும் புறநான் ஆகியநம்முடைய உடலாகும். இந்தப் புறமாகியஉடல் நிலையற்றது. அழியக் கூடியது என்பதை எல்லாமதத்தின் தத்துவஞானிகளும் தெளிவாகக் கூறிவருகிறார்கள்.

**தன்னது சாயைதனக்கு உதவாதுகண்டு**
**என்னதுமாடென்று இருப்பவர்கள் ஏழைகள்**
**உன்னுயிர்போம் உடல் ஒக்கப் பிறந்தது**
**கண்ணது காணொளி கண்டுகொளீரே.**

என்று சொல்லுகிறார் திருமூலர். (திருமந்திரம் 170)

வெயிலிலே செல்லும் பொழுது ஒருவனுடையநிழல் அவனுக்கு இளைப்பாற உதவாது. அவன் ஒரு மரத்தையோ, கூரையையோ தேடவேண்டும். அது போலத் தனக்கு அயலாகத் தானேசேர்த்த பொன்னும், பொருளும், மண்ணும், மனையும் உடல் அழியும் பொழுது நம்முடன் வாராது. காதற்றஊசியும் வாராதுகாண் கடைவழிக்கே என்பது பட்டினத்தார் திருவாக்கு. எனவேபுறச் செல்வங்களைச் சேர்ப்பதும், பெருக்குவதும் புறவாழ்விற்கு - உலகாயதவாழ்விற்கு உதவுமேஒழிய அக வாழ்விற்குப் பயன்படாது.

எனவே நம்முடைய தத்துவஞானிகள் தெளிவாகப் பகுத்துக் கூறியிருக்கின்றனர். 'நான்' என்பது உடல் சார்ந்த எந்தப் பொருளும் இல்லை, இறைவன்/ ஆன்மாவாகிய நம்முள்ளே அமர்ந்து நம்மை இயக்குகின்ற சக்தியே அக நான் என்பது.

ஆதிமுதற்பொருள் எதுஎன்பதிலே சமயவாதிகளிடையே

வேறுபாடு இருக்கலாம். ஆனால் ஆதிமுதற்பொருளே எல்லா உயிர்களையும் தோற்றுவித்து, படைத்து, காத்து, ஒளித்து, அருள் செய்து அழிப்பது என்பதிலே ஒற்றுமையாக இருக்கிறார்கள்.

உயிரில்லாத உடல் பிணம் என்று அறியப்படுகிறது. இதனைவேதாந்தத் தத்துவத்திலே புலி வேடம் போட்டு ஆடுகிறவர் ஆட்டம் முடிந்ததும் எப்படி வேடத்திற்குரிய உடைகளைக் களைந்து தூக்கிஎறிகிறாரோ, அந்த உடைகள் எப்படி உயிரற்றுக் கிடக்கின்றனவோ அதுபோல நம்முடைய உடலும் சக்தியற்றுப் பிணம் ஆகிவிடுகிறது.

ஆன்மா/உயிர்சக்தி இருக்கும் வரையில்தான் உடல். எனவே அந்த ஆதி முதற்பொருளே இயங்கும் சக்தியாகும். (பிரம்மம்/சிவன்/விஷ்ணு/மற்றையசமய மெய் உணர்வுசக்திகள்)

திருமூலர் சொல்லுவது போல

**உள்ளம் பெருங்கோயில் ஊன் உடம்புஆலயம்**
**வள்ளல் பிரானார்க்குவாய் கோபுரவாசல்**
**தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன்சிவலிங்கம்**
**கள்ளப் புலனைந்தும் காளாமணிவிளக்கே -**

**(1804 (1823) திருமந்திரம்)**

எனவே அறிவே உருவானஇறைப் பொருள் ஒன்றேநம்மை இயக்குகின்ற சக்தியாக விளங்குகிறது. இதனைத் தமிழ் வேதாந்த சாத்திரமாகிய கைவல்ய நவநீதத்தில்

**வாராயென் மகனே தன்னை மறந்தவன் பிறந்திறந்து**
**தீராதசுழற் காற்று உற்றசெத்தை போல் சுற்றிச் சுற்றிப்**
**பேராதகாலநேமிப் பிரமையில்திரிவன் போதம்,**
**ஆராய்ந்து தன்னைத்தான் என்று அறியும் அவ்வளவுந் தானே**

**(19 - கைவல்யநவநீதம்)**

**தன்னையுந் தனக்குஆதாரத் தலைவனையுங் கண்டானேல்**
**பின்னைத் தலைவன்தானாய் பிரமமாய்ப் பிறப்புத்தீர்வன்**
**உன்னை அறிந்தாய் ஆகில் உனக்கொருகேடும் இல்லை**
**என்னை நீகேட்கையாலேஈது உபதேசித்தேனே.**

**(20 - கைவல்யநவநீதம்)**

என்று குறிப்பிடுகின்றார்.

நம்மை ஆட்டுவிக்கும் சக்தி என்பது உடல் வலிமை இல்லை; உள்ளே இருந்து இயக்குகிற ஆதாரப் பொருள் என்பதைப் புரிந்து கொள்வதே நம்மைநாம் அறிவதற்கான வழி. இதனைத் திருமூலர்,

தன்னை அறியத் தனக்கொருகேடில்லை
தன்னை அறியாமல் தானேகெடுகின்றான்
தன்னை அறியும் அறிவை அறிந்தபின்
தன்னையே அர்ச்சிக்கத் தானிருந் தானே.

(2345/23 திருமூலர்)

மேலே குறிப்பிட்ட இரண்டும் மிகநெருக்கமாகப் பொருள் ஒத்துப்போவதைக் கவனியுங்கள். அந்த ஞானத்தை எப்படிப் பெறுவது என்பதைக் கீழே திருமூலர் தெளிவாகக் கூறுகிறார்.

என்னை அறிய இசைவித்த என்நந்தி
என்னை அறிந்தறியாத இடத்துய்த்துப்
பின்னை ஒளியில் சொரூபம் புறப்படத்
தன்னை அளித்தனன் தற்பரம் ஆகவே.

(எண் 2430 (2457) திருமூலர்)

(முன் எண்கள் சுப. அண்ணாமலை உரை நூலில் உள்ள எண்கள். அடுத்து உள்ள எண் (வர்த்தமானன்) தமிழ் நிலையம் பதிப்பு)

இதனையே சமயக் குரவர்களும் ஆழ்வார்களும் நமக்குக் கூறுகிறார்கள். தன்னை இயக்கும் சக்தியான ஞானத்தை அறிவதற்கு அந்த இறைவனே அருள் புரிவான். குருவை அளித்து ஞானம் புகட்டும்.

எனவே நம்முடைய புறநானாகிய உடலைத்திடமாக வளர்த்து உறவுகளை, செல்வங்களை வளமாக வளர்த்துக் கொண்டு அவற்றின் மூலமாக சகஉயிர்களுக்கு உதவுங்கள். அக நானாகிய ஞானத்தைப் பெறமுயலுங்கள்; இறைஅருளையும், நிலைத்த திருவருளையும் பெற்று உயருங்கள்.

ஸ்ரீ சற்குருநாதன் துணை.

# பட்டினத்தார் பைந்தமிழ் - 10

தமிழாகரர் தெ. முருகசாமி
(மேனாள் முதல்வர் - இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

உலகம் என்பதற்கு எப்போதும் உலவிக்கொண்டே இருப்பது என்பது பொருள். அதாவது சுழன்றுகொண்டே இருப்பது என்பது கருத்து. இந்தச் சுழற்சி அறிவியல் கண்டு பிடிப்பாலானது. ஆனால் அறிவியலுக்கு முன்னரே ஆன்மீகத் தளத்தில் இவ்வுண்மை கண்டறியப்பட்டு உணர்த்தப்பட்ட போதுதான் அண்டப் பகுதியின் உண்டைப் பிறக்கம் அளப்பரும் தன்மை வளப்பெருங் காட்சி (திருவா. திருவண்டப்) என மாணிக்க வாசகரால் பதிவுசெய்து கூறப்பட்டது. சூரியனைச் சுற்றியுள்ள உலகம் உலவிக்கொண்டே இருக்கிறது.

இப் பேருண்மையையே பின்னாளில் தோன்றிய மெய்கண்ட சாத்திரங்கள், உயிர்களின் வினைக் கோட்பாட்டின் அடிப்படையில் பிறந்திறந்துழல் வதாகச் சுட்டின. இவ்வுண்மைச் சாயலைத்தான் வள்ளுவர் கூறிய பிறவிப் பெருங்கடல் என்ற சொற்களுக்குப் பரிமேலழகர் காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலைப் பிறவிப் பெருங்கடல் எனத் திருவள்ளுவர் கூறியதாய் உயிர்களின் பிறப்பிறப்புச் சுழற்சியின் மீது சார்த்தி உரைத்தார். இச்சுழற்சியை உலகச் சுழற்சிக்கான ஒரு கூறாகக் கருதலாம்.மேற்படியான ஆன்மீக அறிவியலுக்குரியதாகப் பட்டினத்தாரால் பாடப்பட்டது தான் திருக்கழுமல மும்மணிக்கோவையின் 7ஆம் பாடலாகும்.

அருள் பழுத் தளிந்த கருணை வான்கனி என்ற தொடங்கி, கடற்படா வகை காத்தல் நின் கடனே எனமுடியும் 29 வரிகளைச் கொண்டது அப்பாடல். இதில் முதல் 7வரிகள் இறைவனைப் பற்றியவை. எஞ்சிய வரிகள் அனைத்தும் பட்டினத்தார் யான் ஒன்று உணர்த்துவன் எந்தை எனச்சீர்காழியில் மேவும் இறைவனிடம், தான் மீண்டும் மீண்டும் பிறந்திறந்துழலும் பாடெல்லாம் பட்டாலும் இனி அத்தகு சுழற்சியில்லாமல் பிறவாப் பெருநெறிக்கான இறை சிந்தனையோடே என்னைக் காத்தல் வேண்டும் என விண்ணப்பிப்பதாக உள்ளன.

பட்டினத்தார் இறைவனைப் பாவையுடன் இருந்த பரமயோகி எனக் கூறுவது பழம்பெரும் விலாசத்தைப் புதுப்பிப்பதாக உள்ளது. சிவபெருமானை மாதொரு பாகனாக, மங்கை பங்கனாகக் காண்பது சைவசமய மரபு. இம்மரபைப் பாவையுடன் இருந்த என்றும் பரமயோகி என்றும் இருவேறாகக் கூறியதுதான் பட்டினத்தாரின் பைந்தமிழ்க்கு ஏற்றமாய் உள்ளது.

பைந்தமிழ் இலக்கண மரபில் ஒடு, உடன் என்ற சொற்களை உயர் பொருளோடு சேர்த்துக் கூறுதல்தான் சிறப்பாகும். ஆசிரியரொடு மாணாக்கன் வந்தான். அகத்தியருடன் தொல் காப்பியர் வந்தார். இழிபொருளுடன் இச்சொற்களைச் சேர்த்துரைத்துப் பொருள் காண்பதினும் உயர் பொருளுடன் சார்த்துதல் மூலம், இழிபொருளுடன் சார்த்தலைத் தவிர்த்தல் மூலமாக மொழித்தூய்மையாம் என்பதால் பண்பாடு உணரப்படும் என்க! இதனால் ஈண்டு உணரப்படும் பேருண்மை யாதெனில் இல்லறமாயினும் ஆன்மீக மாயினும் பெண்மைக் குற்றம் தருதலை நோக்கமாகக் கொண்ட உயர் மானுடத் தெய்வீகமாகும். அதனால் தான் உமா மகேசுவரன், சீதாராமன் எனக் கூறப்படுதல் போல் பெண்ணின் நல்லாளுடன் பெருந்தகை எனப் பெண்மையை முன்னிலைப் படுத்திக் கூறப்பட்டது.

மேலும் இந்தக் கருத்தைப் பெருமைப்படுத்தும் வகையில் திருஞான சம்பந்தர், உண்ணாமுலை உமையாளொடும் உடனாகிய ஒருவன் என ஒடு, உடன் என்ற இருசொற்களையும் சேர்த்தே கூறியுள்ளார். இச்சிறப்பைப் புதுப்பிக்கும் விதமாகவே பட்டினத்தார் பாவையுடன் என்றார்.

அடுத்து, பரமயோகி என்றது அதிஅற்புதப் பொருளுடைய சொல்; மேலான யோகி என்பது இதன் கருத்தாகும்.பாவையுடன் இருத்தலால் பரமனைப் பரமயோகி என்றல் தகுமா? இதற்கான விடையைப் பட்டினத்தார் பழந்தமிழ் நூல்களிலிருந்து தெளிந்தே ஆம் என விடைபகர்வார் போல் பாவையுடன் இருந்த பரமயோகி என்றார்.

திருஞான சம்பந்தர் தாம் அவதாரம் செய்த சீர்காழியைப் புகழும் ஒரு பதிகத்தின் பத்துப் பாடல்களிலும் வரையார் மகளோடு, மலையான் மகளோடு, உமையோடுடன் அன்பாய் உறைகாழி என்றே கூறுவதால் முன்னோர் மொழியைப் பொன்னேபோல் போற்றும் பைந்தமிழ் மரபில் பட்டினத்தாரும் கூறினார். ஆயினும் சம்பந்தரோ, திருக்கற்குடி என்னும் உய்யக் கொண்டான் மலைப் பதிகத்தில், மென்முலையாளைப் பாகமதாக மதித்து, புனல்சேர் மாதைத் தாழ்சடை வைத்த சதுரர் எனச்சிவ பெருமான் இரு மாதரொடு இருப்பதைச் சிறப்பாகக் கருதிப்பாடியுள்ளார்.

இதில் சதுரர் என்ற சொல், சிவன் - போகியாக இருந்தே யோகியாக இருக்கும் சதுரப்பாடுடையவன் என்பதைச் சிறப்பிக்கிறது. இதைத்தான் வழிமொழிவார் போலப் பட்டினத்தார் பரமயோகி என்றார். போகத்தைப் பயப்பிப்பவன் காமனேயானாலும் அவனை யோக நிலையில் அழிப்பித்தவன் சிவன் என்பதைச் சிவஞான சித்தியாரில் அருள் நந்தி சிவனார், கண்ணுதல் யோகிருப்ப காமன் நின்றிட வேட்கைக்கு விண்ணுறு தேவராதி - மெலிந்தமை ஓரார் என்றார். தாயுமானவரோ,

*இல்லறத் திலிருந்தும் இதயம் அடக்கிய*
*வல்லவன் தானே மகாயோகி (அருள் - அகவல் 81)*

என்றார். இல்லறத்தில் இருந்தவாறே இதயம் அடக்கி வாழ்தலைச் சேக்கிழாரும் திருநீல கண்டர் வரலாற்றால் செயற்கருஞ் செயலாகக் காட்டினார் அன்றோ!

ஆக, பட்டினத்தார் பாவையுடன் இருந்த பரமயோகி என்ற தொடரால் மானுடத்தின் இல்லறப் பயணத்தைத் தாமரை இலைத் தண்ணீர் போலவும் நிலக் கடலையும் அதனுள் பருப்பும் போலவும் ஒட்டியும் ஓடாதும் வாழ்தல் வேண்டும் என்கிறார்.

பின்னர் உள்ள பாடல் வரிகளில் பிறப்பின் சுழற்சியைப் பலவாறாகக் கூறி.

*பிறவா நிலனும் இல்லை, அவ்வயின்*

*இறவா நிலனும் இல்லை, ஆதலால்*

யானிதன் மேலினி இளைக்குமாறிலனே என எல்லாப் பிறப்பும் பிறந்திளைத்தேன் என்று மணிவாசகர் கூறியது போல வருந்திக் கூறினார்.

இருப்பினும் வாழ்க்கையாம் படகைச் சிவனருளாம் கலங்கரை விளக்க ஒளியால் வீடுபேறாம் கரையேறக் கழுமல வாணனைப் பட்டினத்தார் பரவுகையில், நாயேன்

*நந்தாச் சோதிநின் அஞ்செழுத்து நவிலும்*

*தந்திரம் பயின்றதும் இலனே, தந்திரம்*

*பயின்றவர்ப் பயின்றதும் இலனே, ஆயினும்*

*இயன்றதோர் பொழுதின் இட்டது மலராச்*

*சொன்னது மந்திர மாக, என்னையும்*

*இடர்ப்பிறப் பிறப்பெனும் இரண்டின்*

கடற்படாவகை காத்தல் நின் கடனே - என வேண்டுகிறார்.

இங்ஙனம் வேண்டுதலில் ஒரு நுட்பம் உள்ளது. நான்மறை போன்ற எந்த ஒன்றையும் அறியா நிலையில் வெள்ளந்தியாக நான் கூறியதே மந்திரம் - செய்ததே வழிபாடு என்பதாகச் செய்ததை ஏற்று என்னைக் கரை சேர்க்கச் செய் - எனக் கூறிய மனந்திறந்த போற்று தலைத்தான் இறைவன் வரவேற்பான் என்ற தொனியைப் பட்டினத்தார் பாடலின் சாறாகப் பதிவு செய்துள்ளார். இந்தத் தொனிப் பொருளை மேலும் உணரச் செய்ய, பட்டினத்தார் 8ஆம் பாடலில்,

முழுமலத்தை ஓர்கிலார் முக்கட் பெருமான் கழுமலத்தைக் கைதொழாதார்.என்று உடலுயிர் வாழ்க்கையின் மலங்கழுவுவார் கழுமலம் (சீர்காழி) வந்து கைதொழ வேண்டும் என்றார். முழுமலம் என்றது பிறவிக்கு வித்தான ஆணவம். என்னே பட்டினத்தாரின் பைந்தமிழ்ச் சொற்பொருள் விளையாட்டு!

*(தொடரும்...)*

## வள்ளுவரும் திருமூலரும் காட்டிய அன்புநெறி

(டி.ஆர்.குருமூர்த்தி, பேராசிரியர் & துறைத்தலைவர்
வணிகவியல் துறை, அழகப்பா பல்கலைக்கழகம், காரைக்குடி)

அன்பு என்பது பிறருக்காக வாழ்கின்ற குணமாகும். பிறருக்காக வாழ்கின்ற நிலை மனிதனின் அடிப்படையான வாழ்வியல் நெறியாகும். ஒருதாய் குழந்தைகளுக்காக வாழ்கின்ற நிலை, தாயின் அன்பினை வெளிப்படுத்துகின்றது. உன் கண்ணில் நீர் வழிந்தால் என் நெஞ்சில் உதிரம் கொட்டுதடி. உன் உயிராய் நானிருக்க, என் உயிராய் நீயிருக்க என்கின்ற வரிகள் அன்பின் வெளிப்பாடாகக் கவிஞர் கண்ணதாசன் தந்தவரிகளாகும். வாடிய பயிரைக் கண்டு வாடினேன் என்கிற இராமலிங்க அடிகளாரின் வருத்தம் பயிரின் மீது அவர் கொண்டுள்ள அன்பின் வெளிப்பாடாகும். தனது இரண்டாவது கண்ணையும் இறைவனுக்குப் பொருத்த முனைந்த திண்ணப்பனை நில்லுகண்ணப்ப என மும்முறை இறைவன் உரைத்தது, கண்ணப்பன் மீது இறைவன் கொண்ட அன்பின் வெளிப்பாடாகும். அவ்வாறே அனைத்து நாயன்மார்களையும் நாம் சுட்டிக்காட்டலாம். என் கடன் பணிசெய்து கிடப்பதே என்கிற அப்பரது நிலைப்பாடு. பணி செய்வதற்கே வாழ்கின்ற, பணியின் மீது அன்புகொண்டால் பணிநிலை உயரும். இறையருள் மீது அன்பு கொண்டால் இறைநிலை உயரும். அன்பினைத் தமது உடைமை ஆக்கிக் கொள்ளவேண்டும். நாம் பிறருக்காக வாழ்கின்ற போது நாமும் வாழலாம். மற்றவர்களும் வாழ்வார்கள். ஆசிரியர் மாணவர்களுக்காக வாழ்ந்தால், ஆசிரியரும் உயர்வார், மாணவர்களும் உயர்வார்கள். நிர்வாகி, நிர்வாகத்தின் மீது அன்பு செலுத்தினால். நிர்வாகியும் உயர்வார். நிர்வாகமும் உயரும். இத்தகு நிலைப்பாடு தனி மனிதனது அனைத்து நிலைகளிலும் விரும்பப்படுகின்றது. இதன் உச்சத்தை அறிந்து தான் யாதும் ஊரே யாவரும் கேளிர் என்று கணியன் பூங்குன்றனார் நம்மை உச்சரிக்கவைத்தார். உலகின் மீது அன்பு செலுத்தி. உனது உறவினராக ஏற்றுக்கொள் என்று அன்பின் பரிணாமத்தை எடுத்துச் சொன்னார்.

அன்பினைத் திருவள்ளுவர் வாழ்வியல் நெறியாகச் சொல்லியுள்ளார். திருமூலர் அன்பினைத் தெய்வீக நெறியாகச் சொல்லியுள்ளார். திருக்குறளையும் படித்து அதன் வழியே திருமந்திரம் படிக்கவேண்டும். வாழ்வியல் நெறியின் துணைகொண்டு தெய்வீக நெறியைப் பெறலாம்.

*அன்பிலார் எல்லாந் தமக்குரியர் அன்புடையார்*
*என்பும் உரியர் பிறர்க்கு.*

தமக்காக வாழ்பவர்கள் அன்பில்லாதவர்கள், பிறர்க்காக வாழ்பவர்கள் அன்புடையவர்கள் என்பது தெரிகிறது. அனைத்து இன்பங்களும் தமக்கே என்கிற தன்னல நிலைப்பாடு கூடாது. இது அன்பற்ற நிலைப்பாடாகும். வள்ளுவர் சொல்வது போல, தனது எலும்பையும் பிறருக்குக் கொடுக்க நினைப்பதும் கொடுக்க முனைவதும் அன்பின் வழித்தோன்றலாகும். கண்ணப்பர் தனது கண்களை இறைவனுக்குக் கொடுக்க முனைந்ததை இங்கே பொருத்திப் பார்க்கலாம்.

அன்பைப் பெருக்கி என தாருயிரைக் காக்க வந்த இன்பப் பெருக்கே இறையே பராபரமே; எல்லாரும் இன்புற்று இருக்க நினைப்பதுவே அல்லாமல் வேறொன்றறியேன் பராபரமே, அன்பர் பணி செய்ய எனை ஆளாக்கி விட்டுவிட்டால் இன்பநிலை தானேவந்து எய்தும் பராபரமே. எல்லாரும் இன்புற்றிருக்க வேண்டும் என்று நினைப்பதே எனது நினைப்பாகும். இதைத்தவிர வேறொன்று அறியேன் என்கின்ற தாயுமானவரது நிலை உலகமக்களின்மீது அவர் கொண்டுள்ள அன்பினைக் காட்டுகிறது. மற்றவர்களுக்காகப் பணி செய்வது மற்றவர்களுக்காகவே வாழ்வது என்கின்ற நிலைக்கு வந்துவிட்டால், இன்பநிலை தானே வந்துசேரும் என்கிற தாயுமானவரது நிலை, அன்பினை விதையாகவும், இன்பத்தினைப் பயிராகவும் உதாரணம் காட்டத் தோன்றுகின்றது. அன்பெனும் விதையில்லைஎனில், இன்பம் எனும் வாழ்வு இல்லை. இதனைத்

திருவள்ளுவர், *அன்பின் வழியது உயிர்நிலை அஃதிலார்க்கு*
*என்புதோல் போர்த்த உடம்பு.*

அன்பில்லாதோர் எலும்பைத் தோல் போர்த்திய உடம்பு மட்டுமே கொண்டவர்கள். அன்புடையோர் மட்டுமே அப்படிப்பட்ட உடம்பில் உயிர் கொண்டவர்கள். அன்பே உயிர் என்கிற உயரியநிலை அன்பிற்கு உண்டு என்பதைத் திருவள்ளுவர் தெரிவிக்கின்றார்.

*அன்பகத் தில்லா உயிர்வாழ்க்கை வன்பாற்கண்*
*வற்றல் மரந்தளிர்த் தற்று.*
*அன்புற்று அமர்ந்த வழக்கென்ப வையகத்து*
*இன்புற்றார் எய்துஞ் சிறப்பு*

வறண்ட பாலை நிலத்தில், காய்ந்த மரம் தளிர்க்க வாய்ப்பில்லை. அன்பு இல்லாத குடும்பவாழ்வும் இது போலத்தான், அங்கே இன்பம் தளிர்க்க வாய்ப்பில்லை. பாலை நிலத்தில் மரத்திற்குரிய ஈரம் இல்லை. மரம் தளிர்க்கவில்லை. அன்பெனும் ஈரம் குடும்பத்தில் இல்லையெனில் இன்பம் தளிர்க்காது. அன்பெனும் பிணைப்பால் வாழ்பவர்கள் மட்டுமே தமது வாழ்வில் இன்பம் எனும் சிறப்பினை எய்துவார் என்பது வள்ளுவரின் வாக்காகும். வாழ்வியலில் மிக உயர்ந்த நெறியாக அன்பினைத் தமது பத்துக் குறட்பாக்களில் நிலைநிறுத்துகின்றார் வள்ளுவர்.

மனிதர், மனிதன் மீது அன்பு காட்டுவது வாழ்வியல் நெறி. மனிதன், இறைவனின் மீது அன்பு காட்டுவது தெய்வீக நெறியாகும். திருமூலர் அருளிய திருமந்திரப் பாடல்களிலிருந்து தெய்வீக நெறி இங்கே விளக்கப்படுகின்றது. அன்பே சிவம் எனத் திருமந்திரம் சொல்கின்றது.

*அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார்*
*அன்பே சிவமாவது ஆரும் அறிகிலார்*
*அன்பே சிவமாவது ஆரும் அறிந்தபின்*
*அன்பே சிவமாய் அமர்ந் திருந்தாரே.*

அன்பும் சிவமும் வெவ்வேறல்ல. அவை இரண்டு அல்ல. இரண்டு என்பவர் அறிவிலார்; அன்பேசிவம் என்பதை யாரும் அறியாதிருக்கின்றனர். அறிந்தால், அன்பே சிவமாய் அமர்ந்திருப்பர் என்பது திருமூலரின் கருத்தாகும். பசு எனப்படும் மனிதன் பாசம் என்கிற பற்றுக்களிலிருந்து விலகினால், பதி என்னும் இறைவனைப் (சிவத்தைப்) பெறலாம் என்கிறது சைவ சித்தாந்தம். அன்பினால் சிவத்தைப் பெறலாம். பிறர்க்காக வாழ்ந்தால், பசுவாகிய மனிதன் பதி என்னும் இறைவனை அடையலாம் என்பதை இத்திருமந்திரப் பாடல் உணர்த்துகின்றது.

*என்பே விறகா இறைச்சி அறுத்திட்டுப்*
*பொன் போற் கனலிற் பொரிய வறுப்பினும்*
*அன்போடு உருகி அகங்குழைவார்க்கன்றி*
*என்போல் மணியினை எய்த வொண்ணாதே*

எலும்புகளை விறகாக்கி, எரித்து அதிலிருந்து எழும் பொன் போன்ற கனலில், உடல் சதையினை அறுத்துப் போட்டுவாட்டிவறுப்பதினால் இறையருளைப் பெற்றிட இயலாது. உள்ளத்தில் அன்பு கொண்டு மனம் உருகிப் பணிந்து தொழுபவர்களுக்கு மட்டுமே இறையருள் கிட்டும். இறையருள் பெற வேண்டின் அன்போடு உருகி அகம் குழைதல் வேண்டும் என்கிறார் திருமூலர். தம்மை வருத்திக் கொள்வதால் மட்டுமே இறையருள் கிட்டாது. அன்பினால் உருகிநின்றால் இறையருள் கிட்டும். தவளவண்ணனை நினைதொறும் என் மனம் தழல் மெழுகு ஒக்கின்றதே என்கிற மாணிக்கவாசகரின் உருக்கம் திருவாசகத்தில் காண்கிறோம்.

*என்அன்பு உருக்கி இறைவனை ஏத்துமின்*
*முன்அன்பு உருக்கி முதல் வனைநாடுமின்*
*பின்அன்பு உருக்கி பெருந்த கைநந்தியுந்*
*தன்அன்பு எனக்கே தலை நின்றவாறே*

அன்பால் மனம் உருகி அகம் குழைந்து இறைவனை வணங்குங்கள். முதன்மையான அன்பினால் இறைவனின் அருளைப் பெற முயலுங்கள். இவ்வாறே அன்பு செலுத்திடில், நந்தியெம் பெருமானின் அன்பு, அதாவது இறையருள் கிட்டும்.

*முன்படைத்து இன்பம் படைத்தமுதலிடை*
*அன்படைத்து எம் பெருமானை அறிகிலார்*
*வன்படைத்து இந்த அகலிடம் வாழ்வினில்*
*அன்படைத்தான் தன் அகலிடத் தானே*

மனித உயிர்களைப் படைப்பதற்கு முன்பாக, இந்த உலகைப் படைத்தவன் இறைவன். உலகில் எல்லா இன்பங்களையும் படைத்தருளியவன் இறைவன். அன்பு படைக்க இறைவனிடம் அன்பு செலுத்தி இறைவனை அறியாதிருக்கின்றார். அழியும் இந்த உலக வாழ்வை நிலையானது என்றெண்ணி அதையே பற்றி நிற்கின்றார்கள். அன்பைப் படைத்த இறைவனே உலகெங்கும் பரவியுள்ள உண்மைப் பொருளாகும். அன்பைப் படைத்தவன் இறைவன். அந்த அன்பினை இறைவன் பால் செலுத்தி, இறையருள் பெற்று இறைவனை அடைந்திடல் மனிதனின் பேராற்றலாகும்.

*அன்பின் உள்ளான் புறத்தான் உடலாயுள்ளான்*
*முன்பின் உள்ளான் முனிவர்க்கும் பிரானவன்*
*அன்பின் உள்ளாகி அமரும் அரும்பொருள்*
*அன்பின் உள்ளார்க்கே அணை துணையாமே*

இறைவனை நினைத்து அன்பால் உருகிவணங்குவோரின் உள்ளக் கோவிலிலே இறைவன் இருக்கின்றான். புறத்திலும் உள்ளான். உலகத் தோற்றத்திற்கு முன்பும் இருந்தவன் இறைவன். பின்பும் இருப்பவன் இறைவன். தவமுனிவர்க்கும் தலைவன் இறைவனாவான். அன்புடையோர் உள்ளத்திலே அமரும் அரும்பொருள் இறைவன் . அன்பு உள்ளத்தோடு தன்னை அண்டியவர்களுக்கு என்றும் இறைவன் துணையாக இருப்பான் எனத் திருமூலர் அருளியுள்ளார்.

• *இகழ்ந்ததும் பெற்றதும் ஈசன் அறியும்*
*உகந்தருள் செய்திடும் உத்தமநாதன்*
*கொழுந்தன்பு செய்து அருள் கூரவல்லார்க்கு*
*மகிழ்ந்தன்பு செய்யும் அருள்அது வாமே.*

தம்மீது அன்பு செலுத்தாதவர்களையும், அன்பு செலுத்துபவர்களையும் இறைவனுக்குத் தெரியும். அதற்கேற்ப அறிந்து அருள் செய்திடும் உத்தமநாதன் இறைவன். மிகையான தலையான அன்பு தம்பால் உருகி இறையருள் வேண்டுவார்க்கு, மகிழ்வோடு பக்தர்கள் மீது அன்பு கொண்டு இறையருள் அருளும் அருளே இறைவன் ஆவான் எனத் திருமூலர் அன்பின் மேன்மையினையும், இறையருள் பெறுதற்கு அன்பின் பங்கினையும் விளக்குகின்றார்.

அன்பே சிவம், அன்பெனும் பிடியில் இறைவன் அகப்படுவான், இறைவன் மீது அன்பு செய்வார்க்கே இன்பநிலை; உலகம் படைத்து அன்பைப் படைத்தவன் இறைவன், அன்பால் அண்டியவர்க்குத் துணை இறைவன், அன்பு செய்வாரை இறைவன் அறிவான் என அன்பின் மேன்மையினைத் திருமூலர் விளக்குகின்றார். அன்பினால் அடியேன் ஆவியோடுயாக்கை ஆனந்தமாய்க் கசிந்துருக என்பரம் இல்லா இன்னருள் தந்தாய் என மாணிக்கவாசகர் அன்பினால் உருகி இறையருள் பெற்றதை உருக்கத்தோடு நமக்கு உணர்த்துகின்றார். ஆருயிர்க்கெல்லாம் அன்பு செய்திடல் வேண்டும் என இராமலிங்க அடிகளார் இறைவனிடம் வேண்டுகிறார். பிறருக்காக வாழ்கின்ற அன்பு நிலை மனித வாழ்வை உயர்த்தும். இறையுணர்வு கொண்ட அன்பு நிலை மனிதருக்கு மரணமிலாப் பெருவாழ்வுதரும். இறையருளின் பெருமை இதுவே.

**அன்பே சிவம் - திருச்சிற்றம்பலம்**



# பாவைப் பாடல்களின் சிறப்புகள்

(முனைவர். அ. மீனாட்சி)

## முன்னுரை

தமிழைப் பக்தியின் மொழி என்பர். பரிபாடல் காலத்திலிருந்து தற்காலம் வரை பல்வகையில் இசைத்தமிழ் வளர்ச்சி அடைந்துள்ளது. உள்ளம் உருக இறைவன் மீது பக்தியும், அன்பும், ஆர்வமும் கொண்டு பாடிய பாடல்கள் பக்திப் பாடல்கள் எனப்படும். அப்பாடல்கள் உணர்வாலும், அளவாலும், உலகிலுள்ள எம்மொழியிலும் காணப்படாத அளவு தமிழில் காணப்படுகின்றன. பக்தி இலக்கியக் காலக்கட்டத்தில் தோன்றியவை திருப்பாவை, திருவெம்பாவைப் பாடல்களே ஆகும். மார்கழி மாதத்தில் சைவர்கள் திருவெம்பாவை படிப்பதும், வைணவர்கள் திருப்பாவை படிப்பதும் நம் நாட்டில் தொன்றுதொட்டு இருந்து வரும் வழக்கமாகும். அவற்றை விளக்குவதே இக்கட்டுரையின் நோக்கமாகும்.

## பாவைப் பாடல் விளக்கம்

பாவைப் பாடல் என்பது மார்கழி மாதத்தில் விடியற் காலையில் திருமணம் ஆகாத பெண்கள் ஒருவரை ஒருவர் துயில் எழுப்பிக்கொண்டு கூட்டமாய்க் கூடிப் பொய்கைக் கரைக்குச் சென்று வழிபாடு நடத்திப் பாடுவது ஆகும்.

## பாவைப் பாடல்கள் தோற்றமும் வளர்ச்சியும்

மழை பெய்து நாடு நலம்பெறுவதற்காகவும், தமக்கு நல்ல கணவர் வாய்த்துத் திருமணம் நடைபெறுவதற்காகவும், கன்னிப் பெண்கள் அவ்வாறு வைகறையில் நீராடி நோன்பு நோற்பது பழங்கால வழக்கம். பாவை நோன்பு பற்றிச் சங்க நூல்களில் காணப்படுகிறது. எட்டுத்தொகை நூல்களில் ஒன்றான பரிபாடலில் அம்பாவாடல் எனப் பாவை நோன்பு குறிப்பிடப்பட்டுள்ளது. அம்பா என்பது தேவியைக் குறிக்கும். நற்றிணை, ஐங்குறுநூறு, கலித்தொகை முதலியவற்றில் இது தைநீராடல் எனக் குறிக்கப்படுகிறது. இத்தைநீராடல் நோன்பே

பிற்காலத்தில் மார்கழி நீராடல் ஆயிற்று. பிங்கலந்தை நிகண்டு பனிநீர்த் தோய்தலும், பாவையாடலும், சிறுமிகளுக்குரிய விளையாட்டாகும் என்று கூறுகிறது.

இவ்வாறு விளையாட்டு முறையில் எழுந்த பாவை விளையாடல் பின்னர் இளம் பெண்களுக்குரிய பாவை நோன்பாகி அதன் பின்பு மார்கழித் திங்களில் சைவ வைணவ சமயத்தைச் சேர்ந்த வயதான ஆடவரும், பெண்டிரும் மேற்கொள்ளும் விரதமாய். வளர்ந்துவிட்டது. பழங்காலத்தில் பாவை நோன்பின் போது பூமியானது மழை வளம் பெற்றுக் குளிர்வதாக என வாழ்த்தித் தொடங்குவர். அந்தணர்களுக்குத் தானம் அளிப்பர் என்ற செய்திகளைக் காணலாம். திருப்பாவையிலும் இச்செய்தி துயிலெழல், ஐயமும் பிச்சையும் அளித்தல், குள்ளக்குளிரக் குடைந்து நீராடல், நாடு செழிக்க நல்ல மழையினை வேண்டுதல் என்ற செய்திகளை 1, 3, 7, 9, 12, 13 என்ற எண்ணுள்ள பாட்டுகளில் காணலாம்.

## திருப்பாவை திருவெம்பாவை ஒற்றுமை

திருமணம் ஆகாத பெண்கள் சிலர் வைகறையில் எழுகிறார்கள். இன்னும் கண்விழித்து எழாத மற்றப் பெண்களை எழுப்புகிறார்கள். அவர்கள் ஒருவரோடு ஒருவர் பேசுவது போலப் பாவைப் பாடல்கள் தொடங்குகின்றன. முதலும் முடிவும் இல்லாத ஜோதியான இறைவனை நாங்கள் பாடுகின்றோம். இதைக் கேட்டும் கேளாதவள் போல் இன்னும் விழித்து எழாமல் உறங்குகின்றாயோ, உன் செவி உணர்ச்சியற்ற செவியோ என்று ஒருத்தி கூறுகின்றாள். அதற்கு மேல் மற்றொருத்தி திருவடிகளை நாம் வாழ்த்திய ஒலியைத் தெருவில் கேட்டவுடன் அவள் விம்மி மெய்மறந்து படுக்கையிலிருந்து புரண்டு உணர்ச்சி அற்றவளாய் இப்படிக் கிடந்தாள் இது எங்கள் தோழியின் தன்மை. இதை என்ன அதிசயம் என்பது. உறங்குவோரை எழுப்பச் சென்ற பெண்கள் இவ்வாறு பேசிக் கொள்வதாக

மாணிக்கவாசகரின் திருவெம்பாவை தொடங்குகிறது. மார்கழி மாதத்தில் முழுமதியான நல்ல நாளில் நீராட வாருங்கள். ஆயர்பாடியில் உள்ள செல்வச் சிறுமிகளே நந்தகோபனுடைய மகள் யசோதையின் இளைஞ்சிங்கமாகிய நாராயணன் பாவை நோன்புக்குரிய பறையை நமக்கே தருவான். ஆகையால் உலகத்தார் புகழும்படியாக நீராடுவோம் வாருங்கள் என்று திருப்பாவை தொடங்குகிறது.

இருவரின் பாவைப் பாடல்களிலும் நாடு செழிக்க மழை பெய்யும் காட்சி வருணிக்கப்படுகிறது. மேகமே! இந்தக் கடல்நீரை முன்னே எடுத்துக் கொண்டு வானத்தில் சென்று கருநிறம் பெற்று அந்தத் தேவியின் இடைபோல் மின்னி அவளுடைய திருவடிகளின் பொற்சிலம்புகள் போல் ஒலி செய்து அவளுடைய அழகிய புருவம் போல் வானவில் தோன்றச் செய்து பக்தர்களுக்கு அவள் சுரக்கும் இனிய அருள் போல் மழை பொழிவாயாக என்பது திருவெம்பாவையின் மழைக்காட்சி. மழையே நீ உன் நீரைச் சிறிதும் மறைத்து வைக்காதே. கடலில் புகுந்து நீரை முகந்து கொண்டு ஆரவாரத்தோடு வானத்தில் ஏறித் திருமாலின் நிறம் போல் கருத்து அவனுடைய கையில் உள்ள சக்கரம் போல் அதிர்ந்து ஓசை செய்து அவனுடைய வில் எய்யும் அம்புகள் போல் தடையின்றிப் பொழிவாயாக. நாங்களும் பாவை நோன்புக்காக மார்கழியில் நீராடி மகிழ்வோமாக என்பது ஆண்டாளின் திருப்பாவையில் காணும் மழைக்காட்சியாகும்.

யான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம் என்பதற்கேற்பப் பாவை நூல்கள் ஆன்மாக்களை அஞ்ஞானத்தில் நின்று தட்டி எழுப்பி அழைத்துச் செல்வதைக் காணலாம். இரு நூல்களும் கற்பனையாகப் பாடப் பெற்றவை. ஆண்டாள் திருப்பாவைச் சிறுமிகள் தோழிமார் வீடுகளுக்குச் சென்று அவர்களை அழைத்துக் கொண்டு நீராடி, கண்ணபிரானிடம் போய் வரம் பெறுவது போலக் கற்பனையாகப் பாடியிருப்பதைக் காணலாம். மாணிக்கவாசகரும் இளம்பெண்கள்

தோழிமார்களுடைய அடியார்களுக்கும், சிவபெருமானுக்கும் ஆட்படும் வரம் அளிக்குமாறு வேண்டி இச்சிவனடியைப் போற்றி நீராடலை முடிப்பதாகக் கற்பனையாய் இயற்றியுள்ளார். திருப்பாவையில் மார்கழித் திங்கள் மதிநிறைந்த நன்னாளில் தொடங்குவதாகக் குறிப்பிடப்பட்டுள்ளது. திருவெம்பாவையில் மார்கழி நீராடல் என்று மட்டும் குறிப்பிடப்படுகிறது; அன்றி இன்னநாள் என்று சொல்லப்படவில்லை.

*(தொடரும்...)*

## திருக்குறள் தெளிவுரை

(ம. கார்மேகம்)

### ஒப்புரவு அறிதல்

### உலக முறையினைத் தெரிந்து, செய்யத் தக்கவற்றை அறிதல்

1. **கைம்மாறு வேண்டா கடப்பாடு மாரிமாட்டு**
**என்ஆற்றும் கொல்லோ உலகு.**

கைம்மாறு வேண்டா - கைம்மாறு வேண்டாமல்; கடப்பாடு - கடமையாகக் கொண்டுள்ள; மாரி மாட்டு - மழை தருகின்ற மேகத்தினிடத்து; உலகு - இந்த உலகத்து உயிர்கள்; என் ஆற்றும் கொல்லோ - என்ன கைம்மாறு செய்கின்றன.

கைம்மாறு வேண்டாமல் தன்னுடைய கடமையாகக் கொண்டு மழைதருகின்ற மேகத்தினிடத்து இந்த உலகத்து உயிர்கள் என்ன கைம்மாறு செய்கின்றன? செய்வதில்லை. அதுபோல ஒப்புரவு என்பது கைம்மாறு வேண்டாதது எனல் வேண்டும்.

2. **தாள் ஆற்றித் தந்த பொருளெல்லாம் தக்கார்க்கு**
**வேளாண்மை செய்தற் பொருட்டு.**

தாள் ஆற்றித் தந்த - முயற்சி செய்து ஈட்டித் தந்த; பொருளெல்லாம் - பொருள் எல்லாமும்; தக்கார்க்கு - அப்பொருளைப் பெறுதற்கு உரிய தகுதி உடையவர்க்கு; வேளாண்மை செய்தற் பொருட்டு - ஒப்புரவாகிய உதவி செய்தற் பொருட்டேயாகும்.

ஒருவர் முயற்சி செய்து ஈட்டித் தந்த பொருள் எல்லாம் அப்பொருளைப் பெறுதற்கு உரிய தகுதி உடையவர்க்கு ஒப்புரவாகிய உதவி செய்தற் பொருட்டே ஆகும்.

3. **புத்தேள் உலகத்தும் ஈண்டும் பெறலரிதே**
**ஒப்புரவின் நல்ல பிற.**

புத்தேள் உலகத்தும் - தேவர் உலகத்திலும்; ஈண்டும் - இந்தப் பூவுலகத்திலும்; பெறல்அரிது - பெறுதல் அரிது; ஒப்புரவின் நல்ல பிற -ஒப்புரவினைப் போல நல்லபிற செயல்கள்.

ஒப்புரவினைப் போலப் பிற நல்ல செயல்கள் தேவர் உலகத்திலும் இந்தப் பூவுலகத்திலும் பெறுதல் அரிதாகும்.

4. **ஒத்தது அறிவான் உயிர்வாழ்வான் மற்றையான்**
**செத்தாருள் வைக்கப் படும்.**

ஒத்தது அறிவான் - உலக நடைக்கு ஒத்ததை அறிபவன்; உயிர் வாழ்வான்- உயிரோடு வாழ்கிறவன் ஆவான்; மற்றையான் - அதனை அறியாதவன்; செத்தாருள் வைக்கப்படும் - இறந்தவர்களுள் ஒருவனாகக் கருதப்படுவான்.

உலகநடை அறிந்து உதவுகிறவன் உயிரோடு வாழ்கிறவன் ஆவான்; அந்நடையினை அறியாதவன், இறந்தவர்களுள் ஒருவனாகத்தான் கருதப்படுவான்.

5. **ஊருணி நீர்நிறைந் தற்றே உலகுஅவாம்**
**பேரறி வாளன் திரு.**

உலகு அவாம் - உலக நடையினை விரும்புகின்ற; பேரறிவாளன் திரு - பெரிய அறிவுடையானது செல்வம்; ஊருணி நீர் நிறைந்தற்றே - ஊர்மக்கள் நீர் உண்ணும் குளத்தில் தண்ணீர் நிறைந்தது போல் ஆகும்.

உலகநடையினை விரும்புகின்ற பெரிய அறிவுடையானது செல்வம், ஊர்மக்கள் நீர் உண்ணும் குளத்தில் தண்ணீர் நிறைந்தது

போல் ஆகும். ஊர்க் குளத்தில் நீர் நிறைந்தால் எல்லோர்க்கும் பயன் தருவதுபோல் பேரறிவாளனின் செல்வம் பயன்படும் என்பது பொருள்.

6. பயன்மரம் உள்ளூர்ப் பழுத்தற்றால் செல்வம்
நயன்உடை யான்கண் படின்.

பயன்மரம் - மக்களுக்குப் பயன்படும் மரம் - உள்ளூர்ப் பழுத்தற்றால் - ஊருக்குள்ளே பழுத்து இருப்பது போல்; செல்வம் - பொருட் செல்வம்; நயன் உடையான் கண்படின் - நன்மை செய்யும் விருப்பம் உடையவனிடத்தில் இருந்தால்.

பிறர்க்கு நன்மை செய்யும் விருப்பம் உடையவனிடத்தில் பொருட்செல்வம் இருந்தால் மக்களுக்குப் பயன்படும் மரம் ஊருக்குள் பழுத்திருப்பது போல் பயன்தரும்.

7. மருந்தாகித் தப்பா மரத்தற்றால் செல்வம்
பெருந்தகை யான்கண் படின்.

மருந்தாகித் தப்பா மரத்தற்றால் - விலக்க முடியாத அனைத்துமருந்துக் குணமும் கொண்ட மரத்தைப் போன்றது; செல்வம் - பொருட்செல்வம்; பெருந்தகையான்கண்படின் - ஒப்புரவு செய்ய விரும்பும் பெரிய தகைமை உடையவனிடத்தில் சேர்ந்திருந்தால்.

ஒப்புரவு செய்ய விரும்பும் பெரிய தகைமை உடையவனிடத்தில் செல்வம் சேர்ந்திருந்தால் அச்செல்வம் விலக்க முடியாத அனைத்து மருந்துக் குணங்களும் கொண்ட மரத்தைப் போன்றது.

8. இடன்இல் பருவத்தும் ஒப்புரவிற்கு ஒல்கார்
கடன்அறி காட்சி யவர்.

இடனில் பருவத்தும் - பிறருக்கு உதவுவதற்கான பொருட்செல்வம் தம்மிடம் இல்லாத காலத்திலும்; ஒப்புரவிற்கு ஒல்கார் - ஒப்புரவு செய்வதில் தளரமாட்டார்; கடன்அறி காட்சியவர் - தாம் செய்ய வேண்டிய கடமையினை அறிந்த தன்மையர்.

தாம் செய்ய வேண்டிய கடமையினை அறிந்த தன்மை உள்ளவர்கள் தம்மிடம் பொருள் செல்வம் இல்லாத காலத்திலும் ஒப்புரவு செய்வதில் தளர மாட்டார்கள்.

9. **நயன்உடையான் நல்கூர்ந்தான் ஆதல் செயும்நீர**
**செய்யாது அமைகலா ஆறு.**

நயன் உடையான் - ஒப்புரவாளன்; நல்கூர்ந்தான் ஆதல் - வறுமை அடைந்தான் என்பது ஆதல்; செயும்நீர - செய்யவேண்டியவற்றை; செய்யாது - செய்யாமல்; அமைகலா ஆறு - வருந்துகின்ற நிலையே ஆகும்.

ஒப்புரவாளன் தான் செய்ய வேண்டியவற்றைச் செய்ய இயலாமல் வருந்தும் நிலையே, அவன் வறுமை அடைந்தான் என்னும் நிலையாகும்.

10. **ஒப்புரவி னால்வரும் கேடுஎனின் அஃதுஒருவன்**
**விற்றுக்கோள் தக்கது உடைத்து.**

ஒப்புரவினால் - உலகநடை அறிந்து பிறர்க்கு உதவுவதால்; வரும்கேடு எனின் - பொருட்கேடு (வறுமை) வரும் என்றால்; அஃது - அது; ஒருவன் விற்றுக்கோள் தக்கது உடைத்து - ஒருவன் தன்னை விற்றாவது அதனைப் பெற்றுக் கொள்ளும் தகுதியை உடையது.

உலகநடை அறிந்து பிறர்க்கு உதவுவதால் பொருட்கேடு வரும் என்றால் ஒருவன் தன்னை விற்றாவது அதனைப் பெற்றுக் கொள்ளும் தகுதியை உடையது.

பிறர்க்கு உதவுவதால் ஏற்படும் கேடு, கேடாகாது.

*(தொடரும்...)*



## மடாலய நிகழ்வுகள்

**கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் பள்ளி மாணவர்கள் விளையாட்டுப் போட்டிகளில் வெற்றி**

அழகப்பா பல்கலைக்கழக உடற்பயிற்சிக் கல்லூரியில் அண்மையில் உயர்நிலை மற்றும் மேல்நிலைப்பள்ளிகளுக்கான விளையாட்டுப் போட்டிகள் குறுவட்ட அளவில் (Zonal Level) நடைபெற்றன. காரைக்குடி மற்றும் காரைக்குடியைச் சுற்றி உள்ள பள்ளிகளைச் சார்ந்த நூற்றுக்கணக்கான மாணவர்கள் பல்வேறு விளையாட்டுப் போட்டிகளில் பங்கு பெற்றனர். இப்போட்டிகளில் மாணவியர் 14 வயதுக்கு உட்பட்டோருக்கான கால்பந்துப் போட்டியில் முதலிடத்தைப் பத்தொன்பது வயதுக்கு உட்பட்டோருக்கான மகளிர் நீளம் தாண்டுதலில் 8ம் வகுப்பு மாணவி அ.கீர்த்தனா மூன்றாமிடத்தையும் 19 வயதுக்குட்பட்டோருக்கான ஆண்கள் வட்டு எறிதல் போட்டியில் 11ம் வகுப்பு மாணவன் சி. ஸ்ரீகணேஷ் இரண்டாம் இடத்தையும் பெற்றனர்.

வெற்றிபெற்ற மாணவர்களுக்குப் பதக்கங்கள் மற்றும் சான்றிதழ்கள் வழங்கப்பெற்றன. பல்வேறு பள்ளிக்குப் பெருமை சேர்த்த மாணவ மாணவியரையும் அவர்களைப் பயிற்றுவித்த விளையாட்டு ஆசிரியர்கள் சத்தியப்பிரியா, மதுசூதனன் ஆகியோரைக் கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள், மடாலயக்கல்வி நிறுனங்களின் ஆலோசகர் டாக்டர். குமரப்பன், பள்ளி முதல்வர் திருமதி. மணிமொழிமோகன், துணைமுதல்வர் திருமதி. வள்ளியம்மை ஆகியோர் பாராட்டினர்.

**கோவிலூரில் பள்ளி ஆசிரியர்களுக்கு மாண்டிச்சோரி முறை கல்விக்கான பயிற்சி**

22.07.2017 மற்றும் 23.07.2017 ஆகிய நாள்களில் கோவிலூர் மடாலயத்தில் மாண்டிசோரிக் கல்வி முறை பற்றிய இரண்டு

நாள் பயிற்சி முகாம் நடைபெற்றது. கோவிலூர் மடாலயத்தின் 12வது மடாதிபதி நாச்சியப்ப சுவாமிகள் மாண்டிசோரிக் கல்வி முறையை உருவாக்கிய மரியா மாண்டிசோரி அம்மையாரிடம் பல்லாண்டு பணிபுரிந்தார். கோவிலூர் மடாலயத்தின் கலாக்ஷேத்திரா பப்ளிகேஷன்ஸ் மாண்டிசோரி நூல்களை வெளியிட்டு உலகம் முழுமைக்கும் அனுப்பி வருகிறது. மாண்டிசோரிக் கல்வி முறை மிகச்சிறந்த ஒன்று. குழந்தைகள் இயல்பாக மகிழ்வுடன் பயிலும் கல்வி முறை. எனவே இக்கல்வி முறையை நம் பகுதியில் நடைமுறைப்படுத்தக் கோவிலூர் ஆதீனம் மெய்யப்ப சுவாமிகள் முயற்சி எடுத்து வருகிறார். இதன் ஒரு பகுதியாக ஆசிரியர்களுக்கு மாண்டிசோரிக் கல்வி முறை குறித்துப் பயிற்சி முகாம் கோவிலூர் மடாலயத்தில் நடைபெற்றது.

இரு நாள்கள் நடைபெற்ற இப்பயிற்சி முகாமில் கோவிலூர் முத்துராமலிங்க ஆண்டவர் மழலையர் தொடக்கப்பள்ளி, கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப்பள்ளி மற்றும் தேவகோட்டை லோட்டஸ் ஏ.என்.வெங்கடாசலம் செட்டியார் பள்ளியைச் சார்ந்த ஆசிரியர்கள் 55 பேர் பங்கு பெற்றனர். பாண்டிச்சேரியில் உள்ள விருட்சா மாண்டிச்சோரி கல்விக்குழுமத்தைச் சார்ந்த சங்கர் மற்றும் திருமதி. சால்மா ஆகியோர் ஆசிரியர்களுக்குப் பயிற்சி அளித்தனர். இப்பயிற்சி மிகவும் பயனுள்ளதாக இருந்ததாகப் பயிற்சிக்கு வந்த ஆசிரியர்கள் கூறினர். காரைக்குடிப் பகுதியில் 20 பள்ளிகளில் மாண்டிசோரிக் கல்வி முறையைச் செயல்படுத்த முயற்சி மேற்கொள்ளப்பட்டு வருவதாகக் கோவிலூர் மடாலய மக்கள் தொடர்பு அலுவலர் டாக்டர். குமரப்பன் கூறினார்.

22.07.2017 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சியில் ஆசிரியை பா.தென்றல் அவர்கள் புகழ்ச் சோழ நாயனார் பற்றியும் நரசிங்க முனையரையர் பற்றியும் சொற்பொழிவு நிகழ்த்தினார்.

நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியின் நாட்டு நலப்பணித் திட்டத்தின் சார்பில் கோவிலூரில் டெங்கு விழிப்புணர்வு முகாம் நடைபெற்றது. டெங்கு வராமல் தடுப்பது பற்றிய அச்சிட்ட தாள்கள் மாணவர்களால் கோவிலூரில் உள்ள அனைத்து வீடுகளுக்கும் வழங்கப் பெற்றன. 08.08.2017 அன்று நிலவேம்பு கஷாயம் வழங்கும் நிகழ்வு நடைபெற்றது. கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர் குமரப்பன் முதலில் வழங்கித் தொடங்கி வைத்தார். கல்லூரி முதல்வர் மாயாண்டி வரவேற்றார். திட்ட அதிகாரி முத்துக்கருப்பையா நன்றி கூறினார். ஏராளமான பொதுமக்கள் நிலவேம்பு கசாயம் அருந்தினர்.

15.08.2017 அன்று கோவிலூர் மடாலயக் கல்வி நிறுவனங்கள் ஒன்றிணைந்து 71ஆவது சுதந்திர நாளைக் கொண்டாடின. கோவிலூர் ஆண்டவர் மெட்ரிக் மேல்நிலைப் பள்ளி வளாகத்தில் கோவிலூர் மடாலய அறநிலை உறுப்பினரும் தேவகோட்டை நகரத்தார் பள்ளிகளின் செயலருமான திரு.ராமனாதன் தலைமையில் நடைபெற்றது. பள்ளி முதல்வர் திருமதி.மணிமொழி மோகன் வரவேற்புரை ஆற்றினார். மடாலயக் கல்வி நிறுவனங்களின் ஆலோசகர் டாக்டர். குமரப்பன் சிறப்பு விருந்தினரை அறிமுகம் செய்து வைத்தார். சண்முகநாதன் பொறியியல் கல்லூரி முதல்வரும் தென்ஆப்பிரிக்க நாடான லிபேரியாவில் உள்ள பொறியியல் கல்லூரியில் பணியாற்றியவருமான பேரா. வள்ளியப்பன் தேசியக் கொடியை ஏற்றி வைத்துச் சுதந்திரதின விழா உரையாற்றினார்.

நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரி முதல்வர் மாயாண்டி நன்றி கூறினார். மாணவ மாணவிகளின் கலை நிகழ்ச்சி நடைபெற்றது. மடாலய கணக்குத் தணிக்கையாளர் திரு.முரளீதரன், முதல்வர்கள் டாக்டர். செல்லப்பா, டாக்டர். ரவீந்திரன், திருமதி. மணிமொழிமுருகன் மற்றும் ஆசிரியர்கள், அலுவலர்கள் திரளாகப் பங்கு பெற்றனர்.

## திருவிளையாடற்புராணம் (தொடர்ச்சி)

### மாணிக்கம் விற்றது

வீரபாண்டிய வேந்தனுக்குக் காமக்கிழத்தியர் பலர் இருந்தனர். அவர்களிடத்தே பேரழகு வாய்ந்த புதல்வர் பலர் பிறந்தும் குலப் பயிருக்குக்களைபோல வளர்ந்தனர். தனது குலமனைவியினிடம் குழந்தை தோன்றாதது கண்ட பாண்டியன் மிகவும் வருந்தினார். மன்னவனும் அவனது பட்டமகிஷியும் அஷ்டமி, சதுர்த்தி, சோமவாரம் என்னும் சில விரதங்களை அனுஷ்டித்தனர். சில நாட்கள் சென்ற பின் நன் மகன் ஒருவன் தோன்றினான். வேதம் சொன்னபடி தன் சுகுமாரனுக்கு எல்லா விசேஷங்களையும் முறைப்படி செய்து முடித்தான். செல்வனும் எழிலோங்க வளர்ந்து வந்தான். ஒருநாள் வேட்டையாடச் சென்ற காட்டிலே வீரபாண்டியன் புலியால் கொல்லப்பட்டான். வீரபாண்டியன் இறந்தது கேட்டஅனைவரும் வருத்தப்பட்டனர். அதுதான் சமயம் என்று நினைத்த காமக்கிழத்தியரின் புதல்வர் யானை, குதிரை, பல்வகைப் பொருள்கள், பொன் நகைகள், ரத்தினங்கள் எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு ஓடி மறைந்தனர். மந்திரியர் ஆலோசனை செய்து காலமான வீரபாண்டியனது அந்திமக்கிரியைகளை இளங்குமாரனைக் கொண்டு செய்து முடித்தனர்.

பாண்டியகுமாரனுக்குத் திருமுடி சூட்ட நினைத்த மந்திரிகள் பொக்கிஷத்தைத் திறந்து பார்த்தபோது திகைப்படைந்தார்கள். நவரத்தினங்கள் பதித்த பொன் முடியையும் மற்றும் சில அதிமுக்கியமான பொருள்களும் அங்கே காணாமல் வருந்தினர். காமக்கிழத்தியரின் மக்களே களவாடிச் சென்றிருக்க வேண்டு மெனத் தெரிந்தனர். சிறந்ததான மணிகள் இல்லை; மகுடம் இல்லாது போனால் சிம்மாசனம் இல்லை; பின்னர் அரசியல் இல்லை; என்ன செய்வது? என்று ஏங்கித் தவித்தார்கள். மந்திரிமார்கள் சிவபெருமானைத் தரிசித்து அவருடைய திருவருளைத் தெரிந்துகொள்ளலாம் என்று நினைத்து ராஜகுமாரனுடன் திருக்கோவிலின் வாசலை அடைந்தார்கள்.

அச்சமயம் சோமசுந்தரக் கடவுளே ரத்தின வியாபாரியைப் போல வேஷந் தரித்துக் கொண்டு கோபுரவாசலில் வந்து நின்றார், அவருடைய தோளின்மேல் ரத்தினங்கள் கொண்ட மூட்டை இருந்தது. அந்தத் தெய்வ ரத்தின வியாபாரி மந்திரிகளைப் பார்த்து நீங்கள் எதற்காகக் கவலைப்படுகின்றீர்கள் என்று கேட்டார். மந்திரிகளும் தங்கள் பட்டத்துக்குரிய ராஜ குமாரன் கிரீடம் புனைவதற்கு முடியாதிருப்பதைத் தெரிவித்தார்கள்.

நீங்கள் கவலையை விட்டு விடுங்கள்; என்னிடம் ஒன்பது வகையான ரத்தினங்களும் இருக்கின்றன. அவை எல்லாம் பதினாறு கோடிப்பொன் விலையுள்ளவை. இதோ மாணிக்கம் காட்டுகிறேன் என்று சொல்லிவிட்டு அந்த வியாபாரி கருப்புக் கம்பளியைக் கீழே விரித்து, அதிலே நடுவாக மாணிக்கக்கல்லை வைத்து, அதைச் சுற்றிவர எட்டுத் திக்குகளிலும் எட்டு வகையான ரத்தினங்களை வைத்தார். பார்த்தவர்கள் ஆச்சரியப்பட்டுக் கொண்டிருக்கும் போதே இந்த நவரத்தினங்களும் வலன் என்ற அசுரனுடைய உடம்பின் பகுதிகள் என்று சொன்னார், மந்திரிகள் பெருத்த ஆச்சரியம் அடைந்து வலனைப் பற்றிய விவரங்கள் கேட்டனர்.

வணிகப் பெருமான் மந்திரிகளைப் பார்த்து, அசுர குலத்தில் பிறந்தவன் சிவபக்தன். அவனது பூஜையில் சந்தோஷப்பட்ட சிவபெருமான் அவன் முன்னால் தோன்றி என்ன வரம் வேண்டும் என்று கேட்டார். தான் சண்டையிலே இறந்து போகக்கூடாது என்றும் எதேச்சையாகத் தான் இறந்து போனால் தன்னுடைய உடம்பின் பகுதிகள் எல்லாரும் ஆசைப்படும்படியான நவரத்தினங்களாக வேண்டும் என்று வரம் கேட்டான். சிவபெருமான் அருளினார். உடனேயே வலன் தேவலோகம் சென்றான். இந்திரனை எதிர்த்துச் சண்டை செய்தான். இந்திரன் தோற்று ஓடிப்போனான். ஆனால் வேறு வழியில் சதிசெய்து வலாசுரனைக் கொல்ல நினைத்தான். திரும்பவும் யானையின் மேல் ஏறிவந்து உன்னுடைய வீரத்தையும் வெற்றியையும்

மெச்சுகிறேன். உனக்கு என்ன வரம் வேண்டும்? கேள்தருகிறேன் என்றான் இந்திரன்; வலாசுரன் இடியைப் போலச் சிரித்துவிட்டு, சிவபெருமானிடமே வரம் பெற்றிருக்கும் நான் உன்னிடம் வரம் வேண்டமாட்டேன். உனக்கு ஏதாவது வேண்டுமானால் கேள் தருகிறேன் என்று எதிர் சொன்னான். தனது சூழ்ச்சிபலிக்கும் நேரம் வந்துவிட்டதை உணர்ந்தான் இந்திரன், வல்லாசுரனே ! சிவபெருமான் இருக்கும் வெள்ளியங்கிரிச் சாரலை அடைந்து நான் பெரிய யாகம் செய்யப் போகிறேன். நீ, யாகப் பசுவாக உடனே வர வேண்டும் என்று சொல்லிவிட்டான். இந்திரன் விரும்பியதைக் கேட்டான், வலாசுரன் நீ என்னுடைய பகையாளி அல்ல என்னுடைய நண்பன். தேவர்களே என்னைப் புசிப்பார்கள். எனக்குப் புகழோடு புண்ணியமும் கிடைக்கும். அப்படியே வருகின்றேன் என்று இணங்கிவிட்டான்.

தனது மகனுக்கு பட்டம் கட்டிவிட்டு விரைவாகச் சென்று நல்ல லட்சணங்கள் கொண்ட பசுவாகி யாகசாலையிலே நின்றான், வலாசுரப்பசு கொல்லப்பட்டது. அந்தப் பசுவின் வபையை வச்சிராயுதத்தால் எடுத்து இந்திரன் யாகத்தீயில் ஆகுதி செய்து தேவர்களைச் சந்தோஷப்படுத்தினான். இந்திரனுடைய சூழ்ச்சி வெற்றி பெற்றுவிட்டது.

யாகப்பசுவாக வந்து உயிர்கொடுத்த உத்தமவள்ளல் வலாசுரனுடைய இரத்தமே மாணிக்கம் ஆனது; பற்கள் முத்துக்கள் ஆயின. மயிர் வைடூரியம் ஆயிற்று. எலும்பு வைரம் ஆயிற்று. கொழுப்பு கோமேதகம் ஆயிற்று. தசை பவளம் ஆயிற்று. கண்கள் இரண்டும் நீலமணிகள் ஆகின; கோழை புஷ்பராகம் ஆயிற்று. இவை அனைத்தும் சிவபெருமானுக்குப் பிடித்தமானவை என்று கூறினார்.

பின்பு நவரத்தினங்கள் தோன்றும் இடங்களையும், அவைகளுடைய நிறங்களையும், இனங்களையும், தெய்வங்களையும், பிரகாசத்தையும், நல்ல ரத்தினங்கள் உடம்பிலே போட்டுக்கொண்டால் ஏற்படும் பலனையும் விரிவாக விளக்கிக்

கூறினார் தேவ வியாபாரி. பிறகு வடக்குத் திசையைப் பார்த்து உட்கார்ந்துகொண்டு நவரத்தினங்களைப் பூஜை செய்து எல்லாவற்றையும் கையில் எடுத்துக்கொண்டு சோமசுந்தரக் கடவுளை அஞ்சலி செய்து ராஜகுமாரனுக்கு அளவற்ற ஆயுதமும் ஐசுவரியமும் ஓங்குக என்று வாழ்த்திக் கொடுத்தார். ராஜகுமாரனும் சொக்கலிங்கப் பெருமானை வணங்கி இருகைகளாலும் ரத்தினங்களை வாங்கிக் கொண்டான். அப்போது வணிகப் பெருமான் இந்த நவரத்தினங்களைக் கொண்டு புதிதான கிரீடம் செய்து குமாரனுக்கு முடிசூட்டி அபிஷேக பாண்டியன் என்று பெயர் இடுங்கள் என்று சொன்னார். மந்திரிகள் நவரத்தினங்களுக்கு விலை கொடுக்க வருவதற்குள்ளாக ரத்தின வியாபாரியைக் காணோம். எல்லோரும் திகைத்து நின்றபோது வணிகப் பெருமான் உமாதேவியாருடன் ரிஷப வாகனத்தின் மேல் ஏறிக்கோவிலுக்குள் போவதைப் பார்த்தார்கள். வியாபாரியாக வந்தவர் சிவபெருமானே என்று தெரிந்துகொண்டதும் எல்லாரும் கோவிலுக்குள் சென்று ஈசுவரனையும் ஈசுவரியையும் வழிபட்டனர்.

நவமா மணிகளைக் கொண்டு திறமையாகச் செய்யப்பட்ட புதுக் கிரீடத்தைச் சிறந்த நல்ல நாளிலே ராஜகுமாரனுக்கு வைத்து அபிஷேக பாண்டியன் என்று பெயர் விளங்கச் சொல்லிப் பட்டாபிஷேகம் செய்தனர்.

அபிஷேக பாண்டியன் தனது வீரத்தால் பகைவர்களை வென்றான். தனது கருணையால் உலகை ஆட்சி செய்தான். அரண்மனைப் பொக்கிஷத்திலிருந்து களவாடப்பட்ட பொருள்களையும் மீட்டுக்கொண்டான். களவாடினவர்களுக்குக் கடுமையான தண்டனை விதித்தான்.



**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்

– பதிப்பாசிரியர்

# நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி

(இருபாலாருக்கும்)

(அழகப்பா பல்கலைக் கழக இணைவு பெற்றது)
(அரசு அனுமதி பெற்றது)

**கோவிலூர் – காரைக்குடி – 630 307.**

தொலைபேசி : **04565 - 234 523** கைபேசி : **94435 02017**

**பயிற்றுவிக்கப் பெறும் பாடப் பிரிவுகள்:**

- B.A., Tamil
- B.A., English
- B.Com.,
- B.Com.(C.A).,
- B.B.A.,
- B.Sc., Maths
- B.Sc., Computer Science
- B.Sc., Visual Communication
- B.Sc., Physical Education
- M.Com
- M.Sc (Computer Science)

M.Com., M.Sc., முதுகலை பட்டப்படிப்பிற்கு
அழகப்பா பல்கலைக்கழகத்தில் அனுமதி பெற்றுள்ளோம்.
மாணவர் சேர்க்கை நடைபெறுகிறது

**B.Sc. Visual Communication.,**
(அழகப்பா பல்கலைக்கழகப் பகுதியில் முதன் முதலாகத் தொடங்கப்பட்டுள்ள வகுப்பு)

திரைக்கதை, வசனம் எழுதுதல்,
ஒளிப்பதிப்பு, ஒலிப்பதிவு , படத்தொகுப்பு,
இயக்கம், செய்தி தயாரித்தல், தொகுத்தல்
போன்ற பல துறைகளில் பயிற்சி பெற அரிய வாய்ப்பு !!

**2017 - 2018 ஆம் கல்வி ஆண்டிற்கான மாணவர் சேர்க்கை நடைபெற்றுக் கொண்டிருக்கிறது.**